உன்தாளொழிந்தவற்றையே யுகக்கின்றும்
அந்தாபமற்றிருக்கையால் (௫௮)

எதிராசா = எம்பெருமானாரே, நெஞ்சம் = ஸூத்ரவிஷயங்களிலே மண்டியிருக்கிற மனமானது உன் = ப்ராப்யசேஷியான தேவருடைய, தாள் = நிரதிசயபோக்யமான திருவடிகளுக்கு, ஒழிந்தவற்றையே = பாஹ்யமாய அப்ராப்யவிஷயங்களானவற்றையே, உகக்க = ஆதரிக்க, இன்றும் = இப்போதும், அந்தாபம் = இப்படி அப்ராப்யமான விஷயங்களை விரும்புவதே! என்கிற பச்சாத்தாபமும், அற்று = இல்லாமல் இருக்கையால் = இருப்பதினாலே, அஞ்சில் — விவேகாங்குரயோக்யமான பஞ்சவர்ஷத்தில், அறியாதவர் = அறியாதவர்கள், ஐம்பதிலும் = ஐம்பது வயஸ்ஸிலும், தாமறியார் = அவர்களறியார்கள், என்சொல் = என்று சொல்லுகிற இந்த லௌகிகவார்த்தை, என்கோ = அடியேன் பொருட்டோ? (௫௮)

(வ-ம) எதிகளுக்கு நாதரானவரே! (க) "நீமனம்" என்னும்படி ஸூத்ரவிஷயங்களிலே மண்டியிருக்கிற மனமானது, (உ) "யாதானும் பற்றி நீங்கும்" என்கிறபடியே, ப்ராப்யசேஷியான தேவருடைய நிரதிசயபோக்யமான திருவடிகளை யொழிந்த வப்ராப்ய விஷயங்களானவற்றையே யாதரிக்க, இப்படி யப்ராப்தமான விஷயத்தை விரும்புவதே யென்று தபிக்கவேண்டும்படியான தன்மை யப்ராப்தமாயிருக்கிற வின்றும் அந்தாபஸம்பந்தமாயிருக்கையாலே, (௩) "...தலமாத பாலயே விவேகதமா" என்கிறபடியே, விவேகாங்குரயோக்யமான பஞ்சவர்ஷத்தி லஜ்ஞரானவர்கள் தத்பரிணமதசையான ஐம்பது வயஸ்ஸிலும் விவேகசூன்யதையாலே அஜ்ஞராவர்களென்று சொல்லுகிற இந்த லௌகிகப்ரஸித்தம் எனக்கே அம்சமாயிற்றே? ஆகையால் ஸர்வசக்தி ஸர்வஜ்ஞனை வெனக்கு ஸர்வஜ்ஞரான தேவரொருபோக்கடி கண்டருளவேணுமென்று கருத்து "நெஞ்சமும் தாளொழிந்தவற்றையே யுகக்கும்" என்று பாடமானபோது "அஞ்சிலறியாதார் ஐம்பதிலும் தாமறியாரென்ற சொல்லெனக்கோ வெதிராசா வின்றும் அந்தாபமற்றிருக்கையால், நெஞ்சமுந்தா ளொழிந்தவற்றையே யுகக்கும்" என்று மிப்படியோஜிக்கக்கடவது. (௫௮)

(அ-கை) நீர் "உன் தாளொழிந்தவற்றையே யுகக்கும்" என்று அவர்க்கயமா யப்ராப்தங்களாயிருக்கு மவற்றையே பற்றினால்,

(க) திருவாய்-௩-௭-௮. (உ) திருவி-௯௫. (௩) வி-பு-௧-௧௭-௭௫

விரஸமாயிருக்கிற வுடம்பை அவரெப்படி யங்கீகரிக்கப் புகுகிறாரென்று பார்ஶ்வஸ்தர்க்கபிப்ராயமாக, ஆஶ்ரயணத்தசையிலே குணஹீநனாய், அத்தாலே விரஸனாயிருக்கிற வென்னுடைய தோஷத்தை போக்யமாக விரும்பி யங்கீகரித்தருளின வெம்பெருமானார் என்னை யுபேக்ஷித்தருளாரென்றுமதை ஸித்தாந்தமாக வருளிச்செய்கிறார்

வேம்புகறியாக விரும்பினர் கைத்ததென்று
தாம்புகடாதே புசிக்குந் தன்மைபோல்—தீம்பனிவ
னென்றுநினைத்தென்னை யிகழார் எதிராசர்
அன்றறிந் தங்கீகரிக்கையால் (ருக)

வேம்பு=வேப்பிலையும், கறியாக=கறியமுதாக, விரும்பினர் தாம்= அபேக்ஷித்த தாங்கள், கைத்ததென்று = கைப்பாகவிருக்கிறதென்று, புகடாதே = உபேக்ஷியாதே, புசிக்கும் = புஜிக்கிற, தன்மைபோல் = ஸ்வபாவம்போலே, தீம்பனிவனென்று = இவன் துஷ்டனென்று, நினைத்து=விசாரித்து, என்னை = அடியேனை, எதிராசர் = எம்பெருமானார், அன்று=அக்காலத்தில் - அங்கீகாரஸமயத்தில், அறிந்து= தோஷயுக்தனென்றறிந்து, அங்கீகரிக்கையால்=அந்த தோஷத்தையே போக்யமாகக்கொண்டு அங்கீகரித்தருளுகையாலே, இகழார்=உபேக்ஷித்தருளார்

(வ்-ம்) அதாவது (க) "வேம்புங்கறியாகுமென்று" என்கிற படியே, ஸரஸமாமவற்றை யுபேக்ஷித்து, அத்யந்தம் கைப்பையுடைத்தாய், விரஸமாயிருப்பதான வேப்பிலை தொடக்கமாயுள்ள தத்ஸம்பந்திபதார்த்தங்களைச் சோற்றுக்கு உபதம்ஶமாகவாதரித்து புஜிக்குமவர்கள், அது விரஸமாய்க்கைத்ததென்று அதை விரும்பிப் புஜிக்கும் தாங்கள் உபேக்ஷியாதே புஜிக்கும் ஸ்வபாவம்போலே அங்கீகாரஸமயத்திலே தோஷயுக்தனென்றறிந்து, அதை போக்யமாகக் கொண்டங்கீகரித்தருளுகையாலே, எம்பெருமானாரிப்போதிவன் தோஷயுக்தனென்று உபேக்ஷித்தருளார் (உ) "ஸ்யேஷ்யஸ்-நத்யஜேயம்" என்னும்படி யிதோராங்கீகாரத்தாட்டைய மிருந்தபடியென்னென்று கருத்து (ருக)

(அ-கை) உம்முடைய தோஷம் பாராதே யங்கீகரித்தோமாகில் மேலுள்ளதும் நாமே க்ரமத்திலே செய்கிறோமென்று, எம்பெருமா

(க) திருவ-கக (உ) ரா-யு-கஅ-ரு

னுக்கு நினைவாகத் த்வதநுபவயோக்யமான காலத்தை யெல்லாம் வ்யர்த்தமே போக்கி, அதுக்கச்சலான ஸம்ஸாரத்திலேயிராமல் அநுபவத்துக்குப்பாங்கான தேசத்திலே சேர்த்து, அதுக்கிடைச்சுவர் தள்ளிப்போகட வேணுமென்கிறார்

அவத்தே பொழுதை யடியேன் கழித்திப்
பவத்தே யிருக்குமது பண்போ — திவத்தே யான்
சேரும் வகையருளாய் சீரார் எதிராசா
போருமினி யிவ்வுடம்பைப் போக்கு (௨௦)

அடியேன் = தாஸபூதனான நான், பொழுதை = தேவருடைய வநுபவ கைங்கர்யங்களுக்கடைந்த விலக்ஷணமான காலமெல்லாம், அவத்தே = வ்யர்த்தமாக, கழித்து = போக்கி, இப்பவத்தே = விரோதியாயிருக்கிற இந்த ஸம்ஸாரத்தில், இருக்குமது = பொருந்தியிருக்கிறது, பண்போ = தேவருடைய க்ருபாஸ்வபாவத்துக்குச் சேருமோ? திவத்தே = பரமபதத்தை, யான் = அடியேன், சேரும்வகை = அடையும் ப்ரகாரத்தை, அருளாய் = க்ருபை செய்தருளீர், சீர் = ஸமஸ்த கல்யாண குணங்களாலே, ஆர் = பூர்ணரான, எதிராசா = எம்பெருமானாரே! போரும் = ஸம்ஸாரத்தில் சிறையிருப்பு போரும்-போரும், இனி இவ்வுடம்பை = இனி இந்தச் சரீரத்தை, போக்கு = போக்கியருளவேணும் (௨௦)

(வ-ம்) தேவருடைய வநுபவகைங்கர்யங்களுக்குக் கடைத்த விலக்ஷணமான காலமெல்லாம் அதுக்கிட்டுப்பிறந்த அடியேன் படிப்பட்டவந்தப்பொழுதைப் பழுதே போக்கி, விரோதியாயிருக்கிற ஸம்ஸாரத்தில் பொருந்திப்பிருக்கிறது தேவர் க்ருபாஸ்வபாவத்துக்குப் போருமோ? ஆகையால் கைங்கர்யவர்த்த(ர்)கமாய், (க) "பரந்தாமமென்னுந்திவ்ய" என்னும்படியான தேசத்திலே யபேக்ஷையுடைய நான் கெடுமரக்கலங்கரைசேர்ந்தாப்போலே சேரும்ப்ரகார மிரங்கியருள வேணும் — ஸமஸ்தகல்யாணகுணபரிபூர்ணராய எதிகளுக்கு நாதரானவரே! ஸம்ஸாரத்தில் சிறையிருப்புப்போரும் இனி பகவத் ஸ்வரூபதிரோதாநகரியாய், விபரீதஜ்ஞாநஜநநியாய் ஆத்மாவோடே பொருந்தியிருக்கிற விந்ததேஹத்தைப் போக்கியருளவேணும், இதுவே புருஷார்த்தம், பண்பு = ஸ்வபாவம், "அடியேன் இப்பவத்தே இருக்குமதுபண்போ" என்று கீழோடே கூட்டவுமாம் (௨௦)

---

(க) இரா-நூ

(அ-கை) ஆனாலும் மூடைய தோஷபூயஸ்த்வத்தைப்பாராதே அருந்தேவைகளைச்செய்யும்படி சொல்லக்கூடிமத்தனே பாவென்னில்; அஸத்ருஶாபராதனான வடியேனுடைய ப்ரகருதிஸம்பந்த நிபந்தனமாய் வருமபராதங்களையெல்லாம் பொறுத்து ரக்ஷிக்கு மவரானபின்பு, ஸகலஜீவலோகஸமுஜ்ஜீவனார்த்தமாக வவதரித்தருளின தேவர், அதிசபலனானவெனக்கு தயைபண்ணி ரக்ஷிக்கவேணுமென்கிறார்.

> எனைப்போல் பிழைசெய்வா ரிவ்வுலகினுண்டோ
> உனைப்போல் பொறுக்கவல்லாருண்டோ — அனைத்துலகும்
> வாழப்பிறந்த யெதிராச மாமுனிவா
> ஏழைக்கிரங்காயினி. (௬௯)

எனைப்போல் = அடியேனைப்போல், பிழை = அபராதத்தை, செய்வார் = செய்யுமவர்கள், இவ்வுலகிலுண்டோ = இந்த லோகமெல்லாம் தேடிப்பார்த்தாலும் கிடைப்பரோ? உனைப்போல் = தேவரைப்போலே, பொறுக்கவல்லார = ஸஹிக்கவல்லார், உண்டோ = உபயவிபூதியிலுண்டோ? அனைத்துலகும் = ஸமஸ்தலோகங்களும், வாழ = உஜ்ஜீவித்து வாழும்படியாக, பிறந்த = அவதரித்தருளின, எதிராச = யதிராச ரென்கிற திருநாமத்தையுடைய, மா = பூஜ்யரான, முனிவா = யோகிஜநாக்ரகண்யரே! ஏழைக்கு = சபலனாயிருக்கிற வடியேனுக்கு, இனி இரங்காய் = இனிதயைபண்ணியருளவேணும். (௬௯)

(வ்-ம்) (க) "நிகரின்றி நின்றவென்னீசதைக்கு" என்கிறபடியே அபராதம்பண்ணுமவர்களில் வைத்துக்கொண்டு, மாத்ருஶாபராதக்ருத்துக்களாயிருக்குமவர்கள் இந்தலோகமெல்லாந் தேடிப்பார்த்தாலுங்கிட்டுமோ? (க) "அருளுக்குமஃதேபுகல்" என்கிறபடியே அபராத ஸஹரில்வைத்துக்கொண்டு, தேவரைப்போலே ஸஹிக்கவல்லாருபயவிபூதியிலுண்டோ? ஸகலஜீவலோகமு முஜ்ஜீவித்து வாழும்படியாக வவதரித்தருளி, அவர்கள் ரக்ஷணத்திலே மநநம்பண்ணியருளுகிற வெம்பெருமானாரே! இப்படிக்கைகழிந்தபின்பு, பற்றினத்தைவிடாத சபலனாயிருக்கிற வெனக்கு தயைபண்ணியருளவேணும். (உ) "ಅಹಮಸ್ಮ್ಯಪರಾಧಾನಾಂ-ததஹம் த்வத்ருதேந நாதவாந்" இத்யாதிவத். (௬௯)

---

(க) இரா-நூ-௬௧. (உ) ஸ்தோ-உ-ரு௭.

(அ-கை) "இப்படி யாசிந்தநயந்தம்ஸங்களை யாவிஷ்க ரிக்குமதிகாரிகளைப் பெறுகிறிலோம்" என்றுகந்து, எதிராசமாமுனியா னவெம்பெருமானார் இவர்க்கிவ்விப் பெரும்பேறுகளை மங களபண்ணுவது. இவருடைய ப்ரேமஸ்வபாவத்தைக் கடாக்ஷித் துக்கொண்டருப்பக்காகில், அதுபற்றாமல் அவர்க்கும் ரக்ஷிக்க ல்லது நிற்கவொன்றுதப்பு (க) "உன்னையிலாவியிலே" என்றபடியே, இந்த்ரியபராக்ரமமான பாரதந்த்ரத்தாலே, தம்முடைய வநந்யகதித் வத்தை முன்னிட்டுக் கூப்பிடுகிறார்.

ஐம்புலன்கள் மேலிட் டடரும்பொழுதடியேன்
உன்பதங்கடம்மை நினைந்தோலமிட்டால்—பின்பவைதாம்
என்னையடராம லிரங்காய் எதிராசா
உன்னையல்லா லெனக்குண்டோ? (சஉ)

ஐம்புலன்கள் = பஞ்சேந்த்ரியங்கள், மேலிட்டு = ஆக்ரமித்து, அடரும்பொழுது = ஸ்வ ஸ்வகாரமப்படி ஸ்வ ஸ்வ விஷயங்களைக் காட்டிக் காட்டென்று நடந்து பாதிக்கும் தசையிலே, அடியேன் = தேவர்க்கு சேஷபூதனான அடியேன், உன் = தேவருடைய, பதங்கள் தம்மை = திருவடித் தாமரைகளை, நினைந்தே = (ஸ்ரீகஜேந்த்ராழ்வான், தேவஸம்வத்ஸரத்திலே ஆயிரம் ஸம்வத்ஸரம் முதலை நெருக்கிழுக்க, தான் கரைக்கிழுக்க வலிசசல்பட்டு, அதுதக்குத்தன்னிலே மாகையாலும், அபிமதஸித்தியாலும், பலம் வர்த்திக்கையாலும், த்ராணக்குத்தன்னிலே மல்லாமையாலும், அபிமதாலாபத்தாலும், பலம் க்ஷயிக்கையாலும் துதிகலக முழுத்துமபடியான தசை விளைகையாலே, இனி யிதுக்கெவ்வருக்கிலே யென்னும்படியான ஆபத்தையடைந்து, இத்தசையில் விரோதிநிரஸநசீலனான ஸர்வேஶ்வரனே நமக்கு ரக்ஷகனென்றநுஸந்தித்து "நாராயணாவோ" என்றோலமிட்டாப்போலே, ஸகலாபந்நிவாரணமான தேவர் திருவடிகளை) ஸ்மரித்து, ஓலமிட்டால் = ராமாநுஜா! வென்று கூப்பிட்டால், பின்பு = அநந்தரம், அவைதாம் = அப்படி பாதிக்குமவையான அவ்விந்த்ரியங்கள்தான், என்னை = அடியேனை, அடராமல் = மேலிடாமல், இரங்காய் = க்ருபைசெய்தருளீர். எதிராசா = யதிகளுக்கு நாதரானவரே! உன்னையல்லால் = தேவரையொழிய, எனக்கு = அடியேனுக்கு (ரக்ஷகர்) உண்டோ = இனிவேறுண்டோ? (ரக்ஷகாந்தரமில்லை யாகையாலே தேவரே ரக்ஷித்தருளவேணுமென்றுகருத்து) "உன்பதங்கள் தம்மை நினைந்தோலமிட்டால்" என்கிறதுக்கு, "எம்பெருமானார் திருவடிகளே சரணமென்று மநஸ்ஸாலே ஸ்மரித்து வாக்காலே பெருமிடறு செய்து கூப்பிட்டால்" என்று பொருளாகவுமாம். (சஉ)

(க) தி-வாய-எ-க.

(வ்-ம்) (௧) 'கோவாயைவரென்மெய்க்குடியேறி' இத்யாதிப்படியே, பஞ்சேந்த்ரியங்களுமாக்ரமித்து ஸங்கிரகராணும்படி ஸ்வஸ்வவிஷயங்களைக்காட்டி, காட்டென்று தொடர்ந்து பாதிக்குந்தசையிலே கேவலக்கே ஹேஷப்ரஜ்ஞனவடியேன் கஜேந்த்ராழ்வான மடுவின் கரையிலே, (௨) "க்ராஹக்ரஸ்தே கஜே-ராஜ ஸ்ரீகாஷ்டே ஜலே" என்று (௩) *முழுவலி முதலை நீருக்குள்ளே யிழுத்துக்கொண்டு போய் நலியும்போது, (௪) "மனஸா சிந்தயந்ஹரிம்-மநஸா சிந்தயந்தரிம்" என்று சிந்தித்து (௫) "நாராயணாவோ" என்றோலமிட்டாப்போலே, ஸகலாபந்நிவாரணமான தேவர் திருவடிகளை ஸ்மரித்து ராமாநுஜாவென்று கூப்பிட்டவே,

அநந்தரம் அப்படி பாதகங்களானவவை, அடியேனை மேலிடாமல், தயைப்பண்ணியருளவேணும் எதிகளுக்கு நாதரானவரே! தேவரையொழிய வெனக்கு ரக்ஷகராவார்? இனி வேறுண்டோ? வேறு ரக்ஷகாந்தரமில்லையாகையாலே, தேவரே ரக்ஷித்தருளவேணுமென்று கருத்து "உன்பதங்கள் தன்னை நினைந்தோலமிட்டால்" என்கிறதுக்கு எம்பெருமானார் திருவடிகளை சரணமென்று மநஸ்ஸாலே ஸ்மரித்து, வாக்காலே பெருமிடறுசெய்து கூப்பிட்டாலென்னவுமாம் (௪௨)

(அ-கை) 'இரங்காயெதிராசா" என்று அவரை வேண்டுகிறதென்? ப்ராப்யபூமியில் ப்ராவண்யமும், த்யாஜ்யபூமியில் ஜிஹாஸையும் மதிகாரிக்கவஶ்யாபேக்ஷையாயிருந்தது அவையிரண்டுமில்லாத நமக்கு அஸத்ருஶமானதேசத்தை அவரெப்படித்தந்தருளுவரென்று அதில் நின்றும் நிராஸரிக்கிறார்

இந்தவுலகிற்பொருந்தாமை யேதுமில்லை
அந்தவுலகிற்போக வாசையில்லை—இந்தநமக்
கெப்படியேதான் தருவ ரெந்தையெதிராசர்
ஒப்பில் திருநாமிக்கது. (௪௩)

இந்தவுலகில் = கொடுவுலகமான இந்த த்யாஜ்யபூமியில், பொருந்தாமை = அடிக்கொதிப்பது- அருசி, ஏதுமில்லை = அத்யல்பமுமில்லை, அந்தவு

(௧) தி-மொ-௭-௭-௧ (௨) வி-தா-ம-௧௧-௪௧ (௩) தி-மொ-௯-௮-௩
(௪) வி-தா-ம-௧௧-௪௭. (௫) சிறியதிருமடல்.

லகில = அநத பராபயபூமியான பரமபதததில, போக = செலல, ஆசை யிலலை = பராவணயமுமிலலை, இநத நமககு = இபபடி யபேகஷிதஙகளா யிருககிற விரணடிலும அநவயமறறிருககிற நமககு, எநதை = தநதையா கிய, எதிராசா = எமபெருமானாா, ஒபபு = உபமானம, இல = இலலாத, (வைபவததையுடைய) திருநாடு=பரமபதததை, எபபடியேதான = எநத பரகாரமாகததான, உகநது = ஸநதோஷிதது, தருவா = உபகரிததரு ளுவா? (௪௪)

(வ-ம) (க) "கொடுவுலககாடடேல" எனனுமபடியான இநத தயாஜயபூமியில அடிககொதிபபு அதயலபமுமிலலை (உ) 'வானு லகநதெளிநதே எனறெயதுவது" எனனுமபடியான அநத பராபய பூமியை பராபிககவேணுமெனகிற பராவணயமுமிலலை இபபடி யபேகஷிதஙகளாயிருககிற விரணடிலு மநவயமறறிருககிற நமககு ஜநகரான வெமபெருமானாா அஸதருஶ வைபவததை யுடைததான (ங) "தெளிவிசுமபு திருநாடு" எனகிற திருநாடடை உகபபுடனே எபபடிததானுபகரிததருளுவா (௪௫)

(அ கை) "இநத வுலகில பொருநதாமை யேதுமிலலை யநதவு லகில போகவாசையிலலை" எனறநுஸநதிததவா, நமமளவிலவாயி ருநது இனி லெளகிகாளவெனனெனறெவாகளிடததிலே கணை வைகக அவாகளபடி சாலததணணிதாயிருநதவாறே இபபடியிருப பது இவாகள பாபஙகளைச செயயுமபிரகார மெனறதுககு நொந தருளிசசெயகிறா

மாகாநதநாரணனா வைகுமவகையறிநதோாக
கேகாநதமிலலை யிருளிலலை—மோகாநதா
இவவிடமேகாநத மிருளெனறு பயமறறிருநது
செயவாகடாம பாவததிறம (௪௬)

மாகாநத = லகஷமீகாநதனான, நாரணனா=ஸாவேஶவரன, வைகு மவகை = (நாராயணதவ பரயுகத ஸமபநதமடியாக ஸமஸதசேதநாசேத நஙகளிலும உளளும புறமபும) வயாபிததிருககிற, பரகாரததை, அறிந தோாககு=அறிநத ஜஞாதாககளுககு,ஏகாநதமிலலையிருளிலலை=தனிமை யிலலை, அநதகாரமிலலை, சுருதி "நாராயண பரோஜயோதி" எனறும, "யாறகணடேன=நாரணனைககணடேன" எனறும, "அவனே யெனனு

(க) திருவாய் ௬-௩-௭ (உ) திருமொழி-௧-௧-௮ (ங) திருவாய்-௬-௭-௩

மயனான ஸர்வேஶ்வரன் எங்கும் வ்யாபித்திருக்கும்ப்ரகாரத்தை நெஞ்சென்னும் உட்கண்ணாலே காணமாட்டாதே, இவ்விடம் ஒருவருமில்லாத ஏகாந்தம், இவ்விடம் தேஜ:ப்ரசாரமில்லாத இருளென்று விப்பயராயிருந்து (க) "త్స్యాన్త్యేత్వం ప్రజనం కరో్షి-த்ஸயாந்தி கேத்வம் வர்ஜிந்ம கரோஷி" என்கிறபடியே பாபஸமூஹங்களை அஜ்ஞானத்தாங்கள் செய்யாநிற்பார்கள், இவர்கள்படி இதுவாவதே யென்று கருத்து வைகல்=சொல்லலும், இருத்தலும், திறம்=ஸமூஹம் இப்பாட்டுக்கடி, எம்பெருமானாருடைய உக்த்யநுஷ்டாநங்களாயிருக்கும் (௪௪)

(அ-கை) கீழ் "மாகாந்தநாரணனார் வைகுமவகை" என்று வ்யாப்தியை ப்ரஸ்தாவித்து, இப்படி ஸர்வவ்யாபகனான வவனோடு அநாதியாய் வருகிற ஸம்பந்த முண்டாயிருக்க, அதை அறியாதே கீழ்ச்சொன்ன மோஹாந்தரிலே யநுபதமராயிருந்த நான், ஆசார்ய ஸம்பந்தத்தாலேயன்றோ உஜ்ஜீவித்ததென்று ஸ்வலாபத்தை எப்போதும் மநுஸந்தித்துப்போருவென்று, தம்திருவுள்ளத்தைக்குறித் தருளிச்செய்கிறார்

நாராயணன் திருமால் நாரம்நாமெனனுமுறை
யாராயில் நெஞ்சே யநாதியன்றோ—சீராரும்
ஆசாரியனாலேயன்றோ நாமுய்ந்ததென்று
கூசாமலெப்பொழுதுங்கூறு (௪௫)

நாராயணன் திருமால்= "திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்" என்கிறபடியே ஶ்ரிய:பதியானவன் நாரஶப்தவாச்யங்களான வஸ்துமாத்ரங்களையுடையவன் நாரம் நாம் = நித்யமான அந்தாரங்கள் நாம், என்னும்=என்கிற, உறவு= அந்த அநாத்யந ஸம்பந்தம், ஆராயில் = நிரூபிக்கில், நெஞ்சே = மனஸ்ஸே! அநாதியன்றோ = இன்றுண்டானதன்றே? அநாதியாய் வருகிறதன்றோ? சீராரும்= அந்தஸம்பந்தத்தை யுணர்த்தின ஜ்ஞாநாதிகுண பரிபூர்ணரான, ஆசாரியனாலேயன்றோ = ஆசார்யராலே யல்லவோ? நாமுய்ந்ததென்று = நாமுஜ்ஜீவித்ததென்று, கூசாமல்=லஜ்ஜாபிமானங்களைவிட்டு, எப்பொழுதும்=ஸர்வகாலமும், கூறு=ப்ரவிஷ்டமாக வநுஸந்தித்துக்கொண்டிரு. (௪௫)

---

(க) பார-ஸம்ப-௭௪ ௧௧.

(வ் ம்) (க)"திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்" என்கிறபடியே, அவன் ஶ்ரியःபதி நாராயணன். நாம் நாரமென்கிற இந்த வநாத்பயநஸம்பந்தம் நிரூபிக்கில், மநஸ்ஸே இன்றாகவுண்டான தன்றே! அநாதியாய் வருகிறதன்றோ? ஆயிருக்கவது நெடுங்காலம் ஸம்பந்தஜ்ஞாநமன்றிக்கே, அஸித்ப்ராயமா யிழந்தன்றோ கிடந்தது. இப்போது தத்ஸம்பந்தத்தை யுணர்த்தின ஜ்ஞாநாதிகுணபரிபூர்ணராயிருக்கிற வாசார்யனாலே யன்றோ நாமுஜ்ஜீவித்ததென்று, (க) "பெருமையும் நாணும் தவிர்ந்து பிதற்றுமின்" என்கிறபடியே, லஜ்ஜாபிமாநங்களைவிட்டு ஸர்வகாலமும் ப்ரஸித்தமாக வநுஸந்தித்துக்கொண்டு போரும். (உ) "இறையு முயிரும்" இத்யாதி. "ஶேஷோஹ்யேஷ ஈஶ்வரஸ்ய - ஆத்மநோஹ்யதிஶேஸ்ய" இத்யாதி. (சரு)

(அ-கை) கீழ் ஆசார்யனாலே யன்றோ நாமுய்ந்த தென்கிறவிதத்தை விசேஷித்தும் ட்டமாக்கி யருளிச்செய்கிறார்.

திருவாய்மொழிப்பிள்ளை தீவினையோந்தம்மைக்
குருவாகி வந்துய்யக்கொண்டு—பொருவில்
மதிதானளித்தருளும் வாழ்வன்றோ நெஞ்சே
எதிராசர்க் காளானோமியாம். (சசா)

திருவாய்மொழிப்பிள்ளை="தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்கிறபடியே பூர்வரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் போக்யமாக வவதரித்த திருவாய்மொழியிலே யவகாஹித்து, அதில் ஶப்தரஸம், அர்த்தரஸம், பாவரஸமென்கிற விவற்றை யநுபவித்து, ததேகநிஷ்டராய, தத்வ்யதிரிக்த ஶாஸ்த்ரங்களை த்ருணவத் ப்ரதிபத்திபண்ணியிருக்கையாலே, திருவாய்மொழியோட்டை ஸம்பந்தத்தையே தமக்குநிரூபகமாக வுடையராய், ஆழ்வார் திருவடிகளிலே ஸர்வவித கைங்கர்யமே யநவரதம் செய்துகொண்டு போராநிற்கிற திருவாய்மொழிப்பிள்ளை, தீவினையோந்தம்மை=க்ரூரகர்மாக்களோமா யிருக்கிறநம்மை, குருவாகி=ஆசார்யராயவதரித்து, வந்து = நாமிருந்தவிடம் தேடிவந்து, உய்யக்கொண்டு= உஜ்ஜீவிக்கும்படி யங்கீகரித்து. பொருவில்=ஶாஸ்த்ரஜ்ஞாநாதிகள் போலன்றிக்கே - உபமாந ரஹிதமான, மதி = திருமந்த்ரத்தால் பிறக்கும் தான ஜ்ஞாநத்தை, தான் = தாம், அளித்தருளும் = உபகரித்தருளும், வாழ்வன்றோ=ஸம்பத்திறலன்றோ? நெஞ்சே=மநஸ்ஸே! யாம் = நாம், எதிராசர்க்கு=எம்பெருமானார்க்கு, ஆளானோம்= அடிமையாயினோம்.(சசா)

---

(க) திருப்பல்லா-கக. (உ) ஞாநஸாரம்.

ராத, மானுஷர்கள் = மனிதருடைய, இருப்பிடந்தன்னில் = வஸிக்கிற ஸ்தலந்தன்னில், இப்பொழுதும் = க்ஷணகாலமும் இரா = வர்த்தியா திருக்கிற, (ஆழ்வான் போல்வாரான) மானுசர்களுக்கு = மநுஷ்யர்களுக்கு, எல்லாவடிமையும் = ஸர்வவித கைங்கர்யங்களையும், செய்யவெண்ணி = செய்யக்கருதி, இரா = அதைச் செய்யாமலிருக்கிற, மானுசர் தமடமை = அறிவற்ற மநுஷ்யர்தங்களை, மானுசராக = பசு ஸமானவர்களை மநுஷ்யராக, என்சொல் எண்ணுவது = எப்படித்தான் எண்ணுவது? ("ஜ்ஞாநேந ஹீந: பசுபிஸ்ஸமாந:" என்னுமத்தனை. (சஎ)

(வ்-ம்) (க) "நள்ளிருள்ளளவும் பகலும் நானழைப்பன் நாராயணனென்னும் நாமம்" என்கிறபடியே, "ராமாநுஜாயநம" என்று திவாராத்ரவிபாக (ரூX) மற வநுஸந்திக்கப் ப்ராப்தமாயிருக்க, அதைச் செய்யாதேயிருக்கிற பசு ஸமாநர் மநுஷ்யர்கள் வர்த்திக்கிற ஸ்தலந்தன்னில் க்ஷணகாலமும் துஸ்ஸஹமாய் வர்த்தியாதிருக்கிற ஆழ்வான் போல்வாராய், ஸாஸ்த்ரவஸ்யரான மநுஷ்யஜந்மாக்களுக்கு (உ) "எந்தொழும்பும் சொல்லால் மனத்தால் கருமத்தினால் செய்வன்" என்கிறபடியே ஸர்வவித கைங்கர்யங்களையுஞ் செய்யவெண்ணியிருக்கப் ப்ராப்தமாயிருக்க, அதைச் செய்யாதேயிருக்கிற க்ருதக்நமநுஷ்யர்தங்களை, (ந) "மானிடவரல்லரென்றென் மனத்தே வைத்தேன்" என்கிறபடியே, பசு ஸமானவர்களை மநுஷ்யராக வெப்படி யெண்ணுவது, (ச) "ஜ்ஞாநேந ஹீநா: பஶுபிஸ்ஸமாநா:-ஜ்ஞாநேந ஹீநா: பசுபிஸ்ஸமாநா:" என்னுமத்தனை

(அ-கை) கீழெல்லாவடிமையுஞ் செய்யவெண்ணி, இராமாநுச என்கிறபாஸுரத்திலே தம்முடைய வாகாதிகரணங்களை இப்படியே யவர்கள் விஷயத்திலே அநந்யார்ஹமாம்படி பெரியபெருமாள் பண்ணியருளினபடியை ப்ரீதியாலே பேசியருளுகிறார்

எண்ணுதென்னெஞ்ச மிசையாதென்னா விறைஞ்சாதுசென்னி
கண்ணுன்னை யொன்றுங்காணலுறு கலியாநலிய
வொண்ணுதவண்ண முலகளித்தோ னெதிராசனடி
நண்ணுதவரை யரங்கேசர் செய்தநலம் நமக்கே (சஅ)

---

(க) தி-மொ-க-க-ரு (உ) இரா-நூ-சo
(ந) தி-மொ-கக-எ-ரு (ச)

கலியார் = கலியுகத்திலுள்ள சேதநர், நலியவொண்ணாத்தன்மை = தங்கலியினுடைய க்ரௌர்யத்தினாலே பீடிக்கப்படாதபடி, உலகு = லோகத்தை, அளித்தோன் = ரக்ஷித்தவரான, எதிராசன் = எம்பெருமானாருடைய, அடி = திருவடிகளை, நண்ணுதவரை = கிட்டி ஆச்ரயியாதவர்களை, என்னெஞ்சம் = என்னுடைய மநஸ்ஸானது எண்ணாது = ஸ்மரியாது, என் நா = என்னுடைய வாக்கானது, இசையாது = ஸ்துதியாது, சென்னி = என் சிரஸ்ஸானது இறைஞ்சாது = வணங்காது கண்ணொன்றை = என் கண்களானவை ஒன்றும் = ஒன்றையும், காணலுறா = காணலுறாது அரங்கேசர் = சிந்தையினோடு கரணங்களைத் தந்த ஸ்ரீரங்கராஜரான பெரியபெருமாள், செய்தநலம் நாடுமே = அக்கரணங்கள் அநுபயோகமாகாமல் உபகாரஞ்செய்த நன்மை யிவையாயிற்று ("கலியார் நலியவொண்ணாத வண்ணம் உலகளித்தோன் எதிராசன்" என்கிறவிடத்தில், கலியார் = கலியானது, நலியவொண்ணாதவண்ணம் = தன்னுடைய க்ரௌர்யத்தினாலே பாதியாதபடி, உலகளித்தோன் = லோகத்தை ரக்ஷித்த, எதிராசன் யதிபதி என்றும் பொருளாகவுமாம்) (௭௬)

(௭௭) (௧) "தாழ்வொன்றில்லா மறைதாழ்ந்து தலமுழுதுங் கலியே யாள்கின்ற நாள்வந்தளித்தவன்" என்கிறபடியே, கலியானது தன்னுடைய க்ரௌர்யத்தினாலே பாதி(க்காத)யாதபடி லோகத்தை ரக்ஷித்தவராய், (௨) "பேரொன்றுமற்றில்லை" என்கிறபடியே, பரமப்ராப்யங்களான எம்பெருமானார் திருவடிகளைக் கிட்டி ஆச்ரயியாதவர்களை (௩) "நையுமனமுன்குணங்களையுன்னி" இத்யாதியாலும், (௪) "வ்ருத்யம் யத்ஸ்வீ-நியமய யதீந்த்ர" இத்யாதியாலுஞ் சொல்லுகிறபடியே, தத்விஷயத்திலே ப்ரவணமான வென்னுடைய மநஸ்ஸு முதலான கரணங்களானவைகள் ஸ்மரித்தல், ஸ்துதித்தல், பஜித்தல், தர்சித்தலாகிற ஸ்வஸ்வகார்யங்களைச் செய்யாது சிந்தையினோடு கரணங்களைத் தந்த ஸ்ரீரங்கராஜரான பெரியபெருமாள், அவை அநுபயோகமாகாமல் நமக்குச்செய்த நன்மை இவையாயத்து நலம் = ஸம்பத்து, இங்கு தேஹஸம்பத்தியிறே "இசையாதுநா" (௫) "மந: பூர்வோ வாகுத்தர: - மந:பூர்வோவாகுத்தர:" என்கிறபடியே, அதுக்கநந்தரபாவியான நாவுடைய வாயானது, (௬) "நாவியலாலிசைமாலைகளேத்தி" என்கிறபடியே, ஸ்துதிரூபமான ஸப்தஸந்தாப

---

(௧) இரா-நூ-௧௬ (௨) இரா-நூ-௪௫ (௩) இரா-நூ ௧0௨

(௪) யதிராஜவிம்ஶதி (௫) யஜு-ஏ-௧-௭ (௬) இ வாட-௪-௫ ௪

பங்கைப் பண்ணமாட்டாது, (இறைஞ்சாதுசென்னி) (க) "ப்ரமாமி மூர்த்நா-ப்ரணமாமி மூர்த்நா" என்னும் அவருடைய சென்னியிறே (கண்ணுனைவையொன்றுங்காணுது) (உ) "கண்கருதிநோக்காண்" (ஈ) 'ஶ்ரீமாதவாங்க்ரி-ஸ்ரீமாதவாங்க்ரி' என்னும்படியான திருவடிகளைக்கித்சமும் தர்சிக்க வாசைப்படாது, (௪) "காணலுறுகின்றேன்" என்கிறவிடத்துக்கு, காணவாசைப்படுகிறேனென்றிறே யருளிச்செய்தது கண்பாரென்கிறது (ரு) "ஏவினார் கலியார்" என்றபடியே பாதகத்வத்திலுறப்பைப் பற்றுவாய்த்து (சஅ)

(அ-கை) "எதிராசனடி நண்ணுதவரை நண்ணுது" இத்யாதியாலே, தமக்கு ஸம்ஸாரிகளிடத்திலுண்டான வைமுக்யத்தை தர்சிப்பித்து, மீள அவர்கள் நாசத்தைக்கண்டு ஆறமாட்டாதே, அவர்களுக்கு மோக்ஷோபாயமாக எம்பெருமானாருடைய வாஸ்ரயணத்தை விதிக்கிறார்.

நந்தாநரகத்தழுந்தாமை வேண்டிடில் நானிலத்தீர்
எந்தாதையான வெதிராசனை நண்ணுமென்றுமவன்
அந்தாதிதன்னை யநுசந்திப்புமவன் தொண்டருடன்
சிந்தாகுலங்கெடச்சேர்ந்திரு முத்திபின்சித்திக்குமே (சகூ)

நந்தா = ஒருகாலு மநுபவித்து முடியாத, நரகத்து = ஸம்ஸாரமாகிற நரகத்திலே, அழுந்தாமை = மக்நராகாமை, வேண்டிடில் = அபேக்ஷிதமாகில், நானிலத்தீர் = நாலுவகைப்பட்ட பூமியிலுண்டானவர்களே! என் = அடியேனுக்கு, தாதையான = பிதாவான, எதிராசனை = எம்பெருமானாரை, நண்ணும் = ஆச்ரயியுங்கோள், என்றும் = ஸர்வகாலத்திலும், அவன் அந்தாதிதன்னை = மோக்ஷைகஹேதுவாயிருக்கிறவவருடைய திருநாமத்தைப் பாட்டுகள்தோறும் ப்ரதிபாதிப்பதாய் அதற்குமேல் ப்ரபந்நஜந காயத்ரியாயிருக்கிற வைலக்ஷண்யமான நூற்றந்தாதிதன்னை, அநுசந்தியும் = அநுஸந்தியுங்கோள், அவன் தொண்டருடன் = அவர் திருவடிகளிலே சபலராய்த் தொண்டுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடன், சிந்தாகுலம் = இதர ஸஹவாஸத்தாலுண்டான மநோதுக்கமெல்லாம், கெட = நசிக்கும்படி, சேர்ந்திரும் = ஒருநீராகப் பொருந்தியிருங்கோள், பின் = அனந்தரம், முத்தி = மோக்ஷமானது, சித்திக்கும் = ஸம்ஶயமற ஸித்திக்கும் (சகூ)

---

(க) யதிராஜவிம்ஶதி (உ) திரா-நா- (ங) யதிராஜவிம்ஶதி-க
(௪) ௪ திருவ-௩௪ (ரு) தி-மொ-௪-௬-அ

பரமேவ்யோமந்" என்று சொல்லுகிற பெருத்த ப்ரஸித்தியை யுடைத்தாயிருப்பதான அந்தப் பரமபதத்திலே, உங்களை = நித்யஸம்ஸாரிகளான உங்களை, வைக்கும் = நித்யரோடே யொருகோவை யாக்கிவைப்பர், நீர் = நீங்கள், எதிராசரென்று = எதிராசாவென்று, சிந்தியும் = மனஸ்ஸிலே சிந்தியுங்கோள் (யத்னம் அல்பமாட, பலம் அதிகமாயிருக்கை) (௪௯)

(வ-ம) திருநாமம் அநுஸந்திக்கைக்கு யோக்யமாயிருப்பதான ஸ்லாக்யமான காலத்தை வ்யர்த்தமே போக்கி, அஜ்ஞானத்தாலே ஸம்ஸாரத்திலே பரிப்ரமிக்கிற பாபிகளாயுள்ளவர்களே! ஸர்வகாலத்திலும் ஒருபடிப்பட்டின்று தபஸ்ஸிலே உத்ஸாஹிக்குமவர்களாயிருக்குமவர்களுக்கும் ப்ராபிக்கப்போகாமலிருப்பதாய், (க) "[illegible]-"தக்ஷயே பரமேவ்யோமந்" என்று சொல்லுகிற பெருகிப்ரஸித்தியையுடைத்தா யிருப்பதான வந்தப்பரமபதத்திலே, நித்ய ஸம்ஸாரிகளான வுங்களை யேற்றி நித்யரோடே ஒருகோவையாக்கிவைக்கும் அதுக்குடலாக கீழ்ச்சொன்னவைகளாகா னோக்குதியென்னலாம்படி அதிலு மெளிதாயிருப்பதான வெம்பெருமானார் திருநாமத்தை, எதிராசனென்று நீங்கள் மனஸ்ஸிலே சிந்தியுங்கோள் நோக்குதியல்பமாய், பலமதிகமாயிருக்கும் நோக்கு= யத்னம் (௫௦)

(அ-கை) இனிஸம்ஸாரிகளிழவைத்தான சொல்லவேணுமோ? உம்முடைய நிலை இருந்தபடியென்னென்று எம்பெருமானார்க்கு நினைவாக, அவர்களோ பாதி அநாதிகாலமெல்லாம் வ்யர்த்தமேபோயிருக்க, அதினிழவின்றிக்கே யிருக்கிறவெனக்கு தேவருடைய கருணை யுண்டானபின்பு, தத்லாபக்லேசமுண்டாயத்தென்று ஸ்வலாபத்தைப்பேசியருளுகிறார் இழவு=அலாபக்லேசம்

என்றுமனீச னுயிருமன்றேயுண்டுக்காலமெல்லாம்
அன்றவர்க்கப்பழுதே கழிந்த திருவினையால்
என்றிழவின்றி யிருக்கு மென்னெஞ்சமிரவுபகல்
நின்றுதபிக்கு மெதிராசா நீபருவசெய்தபின்னே- (௫௧)

என்றுள்ள ஈசன = ("நானுன்னை யன்றி யிலேன் கண்டாய் நாரணனே நீ யென்னையன்றியிலை" என்கிறபடியே, ஒழிக்கவொழியாத அவிநா

(க) ஸக்ஷ-ராரா

பாவஸம்பந்தம் நித்யமாக வுண்டாகையாலே) நியந்தாவான ஈஶ்வரன் எப்படி எப்போதும் நித்யஸித்தனாயிருக்கிறானோ? (அப்படியே) உயிரும் = நித்யனானவாத்மாவும், அன்றேயுண்டு = அப்போதே உண்டாயிருக்கிறான், இக்காலமெல்லாம் = இவ்வநாதிகாலந்தொடங்கி, இன்றளவாக = இப்போதளவாக, இருவினையால் = புண்யபாபரூபமான ப்ரபலகர்மத்தாலே, பழுதேகழிந்ததென்று = வ்யர்த்தமாகவே போயிற்றென்று, இழவின்றியிருக்கும் = இப்படி இழந்தநாளுக்கு அநுதபியாமலிருக்கிற, என்னெஞ்சம் = அடியேனுடைய மநஸ்ஸு, எதிராசா = எம்பெருமானாரே! நீயருள்செய்த பின்னே = தேவர் விஶேஷகடாக்ஷம் பண்ணியருளின பின்பு, இராப்பகல் = அல்லும் பகலும், நின்று = இதிலே யொருப்பட்டு நின்று, தபிக்கும் = பரிதபியாநிற்கும் (ருக)

(வ-ம்) (க) 'நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே நீ என்னையன்றியிலை'' என்கிறபடியே, ஒழிக்கவொழியாத ஸ்வஸ்வாமிபாவஸம்பந்தம் நித்யமாகவுண்டாகையாலே, நியந்தாவான ஈஶ்வரன், என்றுதுடங்கி ஸித்தனாயிருக்கும் அப்படியே, நித்யனானவாத்மாவும் அப்ருதக்ஸித்தவிஶேஷணமாகையாலே, அன்றே யுண்டாயிருக்கும் இப்படி யன்றுதுடங்கி தேவர் விஷயீகாரம்பெற்ற வின்றளவாக வுண்டானவென்னுடைய ப்ரபலகர்மத்தாலே ஶேஷஶேஷிஸம்பந்தஜ்ஞாநகார்யமான கைங்கர்யத்துக்கு அடைத்த விந்த அநாதிகாலமெல்லாம் வ்யர்த்தமே போயிற்றென்று இழந்தநாளைக்கு அநுதபியாமலிருக்கிற வென்னுடைய மநஸ்ஸு, தேவர் விஶேஷகடாக்ஷம்பண்ணியருளினபின்பு, திவாராத்ரவிபாக ([illegible]) மற விதிலே யொருப்பட்டு நின்று பரிதபியாநிற்கும் இதென்ன ஸ்வபாவம் ஒரு க்ருபாப்ராபல்ய மிருந்தபடியே! இருவினை = புண்யபாபங்களாகவுமாம் (ருக)

(அ-கை) அநுதாபாதிகளுண்டாகவே, எம்பெருமானாருக்காக, பெரியபெருமாள், ''𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌸𑌮𑌾𑌰𑍂𑌢 𑌪𑌤𑌙𑍍𑌗𑌰𑌾𑌜𑌃- ஸ்ரீமாந் ஸமாரூடபதங்கராஜ:'' என்கிறபடியே எழுந்தருளி யபிமானித்தருளும் பேற்றின் கௌரவத்தை அநுஸந்தித்தருளுகிறார்

கனகக்கிரிமேல் கரிய முகில்போல்
வினதைசிறுவன் மேற்கொண்டு — கனுகிடும்போது

(*) ௪-திருவ-௭

ஏராரரங்க ரெதிராசர்க்காக வென்பால்
வாரா முன்னிற்பர் மகிழ்ந்து (௫௨)

கனககிரிமேல் = ஸ்வர்ணமயமான மஹாமேரு மலையின்மேலே, கரிய முகில்போல் = (படிந்திருக்கிற) நீலமேகம்போலே, வினதை = வினதை யென்னும் ஸ்த்ரீயினுடைய, சிறுவன் = புத்ரனை வைநதேயனை-பெரிய திருவடியை, மேற்கொண்டு = வாஹநமாகக்கொண்டு (கருடவாஹநாரூடராய்) தனுவிடும்போது = சரீரம் விடுகிற ஸமயத்தில், (தாய் முகங்காட்டுமாபோலே) ஏர் = ஸௌந்தர்யாதிகளால், ஆர் = பூர்ணரான, அரங்கர் = பெரியபெருமாள், எதிராசர்க்காக = எம்பெருமானார்க்காக, என்பால் வாரா = அடியேனிருந்த விடத்தே வந்து மகிழ்ந்து = ஹ்ருஷ்டராய், முன்னிற்பர் = முன்னே நிற்பர் இத்தாலென்னக் கபேக்ஷிதமான * முகமும் முறுவலும் காட்டி யநுபவிப்பித்தருளுவர், இது நிஸ்ஸம்சயமென்று கருத்து (௫௨)

(வ்ய) (௧) "काञ्चनस्य गिरेश्शृङ्गे सतडित्तोयदो यथा"—காஞ்சநஸ்ய கிரேஶ்ஶ்ருங்கே ஸதடித்தோயதோ யதா" என்றும், (௨) "மஞ்சுயர் பொன்மலைமேல் எழுந்த முகில்போன்றனர்" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஸ்வர்ணமயமான மஹா மேருவின்மேலே (௩) "பெரும்பவ்வம் மண்டியுண்ட பெருவயிற்றகருமுகிலானது இனி யப்படிந்திருக்குமாபோலே, பரபாகரஸாவஹமாம்படி, வினதை சிறுவனென்னும்படியான பெரியதிருவடிமேல்கொண்டு தேஹபாத ஸமயத்திலே தாய் முகங்காட்டுமாபோலே, ஸௌந்தர்யாதிகளால் பூர்ணரான பெரியபெருமாள் எம்பெருமானாருக்காக நானிருந்தவிடத்தே வந்து ஹ்ருஷ்டராய் முன்னிற்பர் இத்தாலென்னக்கபேக்ஷிதமான முகமும் முறுவலும் காட்டியநுபவிப்பித்தருளுவர் இது நிஸ்ஸம்சயமென்று கருத்து (௫௨)

(அ-கை) இப்படிப் பெரியபெருமாள் பெரியதிருவடிமேல் கொண்டுவந்து திருமுகப்பரத்தாகம் பண்ணும்படியை யநுஸந்தித்து அதுக்கிடைச்சுவராய் பாபரூபதேஹத்துடன் துஸ்ஸஹமான துக்கங்களை யநுபவித்திருக்க முடியாது ஆகையாலே, ஹிதபரவாதக்கரான தேவர் ஸகலதுக்காஸ்பதமான ஸம்ஸாரத்தில் நின்றும் அடியேனைச் சீக்கிரமாக உத்தரிப்பித்தருளவேணுமென்கிறார்

---

(௧) (௨) தி-மொ ௯ ௨-௮
(௩) திருநெ-௨௧

இத்தாலே தென்னரங்கர் செய்கிறதென்றறிந்தே
இருந்தாலுந் தற்கால வேதனையின் கனத்தால்
பதைத்தாவோ வென்னும் இந்தப் பாவவுடம்புடனே
பலநோவுமநுபவித்து இப்பவத்திருக்கப்போமோ
மத்தாலே வல்வினையின் வழியுழன்று திரிந்த
வல்வினையேன் றன்னை யுனக்காளாக்கிக்கொண்ட
இத்தாயும் தந்தையுமா மெதிராசா வென்னை
இனிக்கடுக இப்பவத்தினின்றுமெடுத்தருளே (௫௩)

இத்தாலே = ஹிதபுத்தியாலே, தென்னரங்கர் = பெரியபெருமாள் செய்கிறதென்றறிந்தே யிருந்தாலும் = க்ருபாபலமாக துக்கங்களை யநுபவிப்பித்தருளுகிறாரென்றறிந்தே யிருந்தாலும், தற்காலவேதனையின் கனத்தால் = அந்தந்த காலத்திலுண்டான வேதனையின் மிகுதியாலே, பதைத்து = துடித்து, ஆவோவென்னும் = அந்த துஸ்ஸஹதையாலுண்டான விஷாதத்தாலே துக்கஸூசகமான ஹா! ஓ! என்கிற சப்தங்களைச்செய்யாநின்ற, இந்த பாவவுடம்புடனே = இந்தப்பாபசரீரத்தோடே, பலநோவுமநுபவித்து = வெகுதுக்கங்களையும் அநுபவித்து, இப்பவத்து = இந்தஸம்ஸாரத்தில், இருக்கப்போமோ = இருக்க முடியுமோ? மத்தாலே = தேஹமத்தினாலே, வல்வினையின் வழியுழன்று திரிந்த = பாபலாமத்தின் மார்க்கத்திலே அதுவே யாத்ரையாய் வர்த்தித்த, வல்வினையேன் தன்னை = மஹாபாபியான வடியேனை, உனக்கு = ஸத்துக்களுக்கு ஆஸ்ரயணீயராயிருக்கிற தேவரீர்க்கு, ஆளாக்கிக்கொண்ட = அடிமையாக்கிக் கொண்டருளின, இத்தாயும் = ஹிதத்தைநடத்தும் மாதாவும், தந்தையுமாம் = பிதாவுமாயிருக்கிற, எதிராசா = எம்பெருமானாரே! இனி = தேவாஸம்பந்தத்தை யறிந்தபின்பு, என்னை = அடியேனை, கடுக = சீக்ரமாக, இப்பவத்தினின்றும் = இந்த ஸம்ஸாரத்தினின்றும், எடுத்தருள் = எடுத்துக்கரையேற்றியருளவேணும், (அவர்ஜநீய ஸம்பந்தமடியாக விசேஷித்து ரக்ஷித்தருளுவரென்று கருத்து) (௫௩)

(ஸ்-ம) (௧) "ஆரப்பெருந்துயரே செய்திடினும்" இத்யாதிப்படியே ஹிதபுத்யா பெரியபெருமாள் க்ருபாபலமாக துக்கங்களை யநுபவிப்பிக்கிறாரென்றறிந்தே யிருந்தாலும் அந்தவந்தகாலத்திலுண்டான வேதனையின் மிகுதியாலே துடித்து அந்தத்துஸ்ஸஹதையாலுண்டான விஷாதத்தாலே துக்கஸூசகமான சப்தங்களைச்சொ

(௧) ஜ்ஞாநஸாரம்.

ஸுப்ரீந்த பாபசரீரத்தோடே பஹு து:க்கங்களை யநுபவித்து துஸ்தர ஸஹமான விந்தஸம்ஸாரத்தி லிருக்கப்போகயமோ? (௧) 'பாபமேசெய்து பாவியானேன்'' என்கிறபடியே, தேஹமத்தாலே பாபகாமத்தின் மார்க்கத்திலே அதுவே யாத்ரையாய் வர்த்திக்க மஹாபாபியானவென்னை ஸத்துக்களுக்காச்ரயணீயரா யிருக்கிற தேவர் கடாக்ஷமையாக்கிக்கொண்டருளின ஹிதத்தைக்கூட்டும் மாதாவும் பிதாவுமாயிருக்கிற தேவர் ஸம்பந்தத்தைப்பறித்த பின்பு அடியேனைச் சீக்கிரமாக விந்தஸம்ஸாரத்தில் நின்றும் (௨) ஸம்ஸாரே ''யாந்த்ராய'' என்னும்படி எடுத்துக்கரையேற்றியருளவேணும் அவர்ஜநீய ஸம்பந்த மடியாகவிறே, உத்தரிப்பிக்க நருவரென்று கருத்து (௫௩)

(அ-கை) இப்படி இவரபேக்ஷித்தபடியே, எம்பெருமானாரு மிவரபேக்ஷிதமெல்லாஞ் செய்வாராக வெண்ணியிருக்க, இவர்க்கது பற்றாமல், (௩) *ஒருபகலாயிரமூழியாய், மீளவும் அக்ரமமைப்பார்த்து, ஸர்வவித்பந்துவுமாயிருக்கிற தேவர் நானிந்த தேஹத்தோடே இருந்து துக்கப்படாமல் என்றுதான் நலமந்த மில்லதோர் நாட்டிலே சேரும்படி ஏற்றியருளுவதென்கிறார்

இன்னுமெத்தனை நாளிவ்வுடம்புடனே
இருந்து நோவுபடக் கடவேனையோ
என்னையிங்கினின்றும் விடுவித்து நீர்
என்றுதான் திருநாட்டிலுளேற்றுவீர்
அன்னையுமத்தனு மல்லாச் சுற்றமும்
ஆகியென்னை யளித்தருள் நாதனே
என்னித்தத்தை யிராப்பகலின்றியே
ஏகமெண்ணு மெதிராசவள்ளலே, (௫௪)

அன்னையும் = ப்ரியத்தைப்பண்ணுகிற மாதாவும், அத்தனும் = ஹிதத்தைப்பண்ணுகிற பிதாவும், அல்லாத சுற்றமும் = மற்றும் அநுக்தமான அசேஷபந்துக்களுமெல்லாம், ஆகி = ஆய், என்னை = அடியேனை, அளித்தருள் = ரக்ஷித்தருளுகிற, நாதனே = ஸ்வாமீ! என் = அடியேனுடைய, இத்தை = இஷ்டத்தை, இராப்பகலின்றியே = இரவுபகலின்றியே, ஏகமெண்ணும் = ஒருபடி சிந்திக்கிற, எதிராசவள்ளலே = பரமோதாரராய,

(௧) தி-மொ-௧-௯-௯ (௨) ஶரணாகதிகத்யம் (௩) தி-வா-௯-௯-௯.

யதிகளுக்கு நாதரான எம்பெருமானாரே! (தேவருக்கு ஆட்பட்டபின்பும்) இன்னம் = இன்னமும், எத்தனைநாள் = எத்தனைகாலம், இவ்வுடம்புடனேயிருந்து = இந்தத்தேஹத்திலே யிருந்து, நோவுபடக்கடவேன் = வேதனைபடக்கடவேன் ஐயோ = அந்தோ! என்னை = அடியேனை, இதினின்றும் = பந்தகமான இந்தத்தேஹத்தில் நின்றும், விடுவித்து = முக்தனாம்படி பண்ணி, நீர் = தேவர், என்றுதான் = எப்போதுதான், திருநாட்டினுள் = பரமபதத்தில், ஏற்றுவீர் = ஏற்றியருளுவீர், (இதையருளிச்செய்யவேணும்) (௫௪)

(வ-ம்) (௧) "அன்னையாயத்தனா யென்னை யாண்டிடும் தன்மையான்"-என்கிறபடியே, ப்ரியஹிதங்களைப் பண்ணுகிற மாதாபிதாக்களும், மற்றுமநுக்தமானவசேஷபந்துக்களுமெல்லாமாய் என்னை ரக்ஷித்தருளுகிற நாதனே (௨) "என்மனமேக மெண்ணு மிராப்பகலின்றியே" என்கிறபடியே, என்னுடைய ஹிதத்தை திவாராத்ரவிபாக [illegible] மற வொருபடிச் சிந்திக்கிற பரமோதாரராய், யதிகளுக்கு நாதரானவரே! (௩) 'உனக்காட்பட்டு மடியேனின்னு முழல்வேனோ" என்கிறபடியே தேவருக்கு சேஷபூதனானபின்பு இன்ன மெத்தனை காலமிந்தத்தேஹத்திலே யிருந்து வேதனைப்படக்கடவேன்? ஐயோ! அடியேனை பந்தகமான விந்தத்தேஹத்தில் நின்றும் முக்தனாம்படி பண்ணி, என்றுதான் திருநாட்டினுள் ளேற்றியருளுவீர்? அந்நாளுமொருநாளாமோ? வள்ளல் = ப்ரத்யுபகார ரஹிதமாக வுபகரிக்குமுதாரர் (௫௫)

(அ-கை) செய்தவமபுத்தில் க்ருத்யங்களையும் செய்யவேண்டும் ஸமயத்தில் அபேக்ஷையுமதிகாரிக்கு வேண்டுமென்றுகையாலே, அந்த க்ருத்யங்களுக்கு ஸூசகமாக எம்பெருமானாருடைய ப்ரஸாதத்தாலே தாம் பெற்றபேறுகளை அநுஸந்தித்து வித்த [illegible] ராயருளுகிறார்

தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப்பெற்றோம்
திருவரங்கம் திருப்பதியே யிருப்பாகப்பெற்றோம்
மன்னியசீர்மாறன்கலை யுணவாகப்பெற்றோம்
மதுரகவிசொற்படியே நிலையாகப்பெற்றோம்

---

(௧) கண்ணி-௧ (௨) தி-வாய்-௬-௩-௭ (௩) தி-வாய் ௫-௮ ௧௦

முன்னவராந் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம்
முழுதுநமக்கவை பொழுதே போக்காகப்பெற்றோம்
பின்னையொன்று தனில் நெஞ்சுபோகாமற்பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும்பெற்றோமே

தென்னரங்கர் = தாரு நீயமான கோயிலிலே "அருள்கொடுத்திட்டடியவரை யாட்கொள்வான்" அன்பொடு தென்திசை இலங்கைநோக்கிப் பள்ளிகொண்டருளுகிற பெரியபெருமாளுடைய, சீரருளுக்கு = நிர்ஹேதுக கருணைக்கு, இலக்காகப்பெற்றோம் = லக்ஷ்யமாகப்பெற்றோம், திருவரங்கம் திருப்பதியே = 'தென்னாடும் வடநாடுந்தொழநின்ற திருவரங்கம் திருப்பதி" என்றும் "ஆராமஞ்சூழ்ந்த வரங்கம்" என்றும் "தலையரங்கம்" என்றுஞ் சொல்லுகிறபடியே, அகிலதிவ்யதேச ப்ரதானமான திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப்பெற்றோம் = நித்யவாஸஸ்தானமாகப் பெற்றோம், மன்னிய சீர் = பரபக்த்யாதி கல்யாணகுணங்கள் பொருந்தியிருக்கிற, மாறன் = நம்மாழ்வாருடைய, கலை = தொண்டர்க்கமுதான வகுளபூஷண வாக் அமுதத்தை, உணவாகப்பெற்றோம் = அபூர்வமாக புசிக்கப்பெற்றோம், மதுரகவி = 'தேவுமற்றறியேன்" என்றருளிச்செய்த மதுரகவியாழ்வாருடைய, சொற்படியே = திவ்யஸூக்திப்படியே, நிலையாகப்பெற்றோம் = 'யதீந்த்ரமேவ நிரந்தரம் விஷ்ணோர்வே தைவதம்பரம்' என்றும், 'உன்னையொழியவொரு தெய்வமற்றறியா மன்னுபுகழ்சேர் வடுகநம்பி தன்னிலையை' என்றும், நாமும் நம்முடையாரும் பேசும்படியான சரமபர்வ நிஷ்டையே நிஷ்டையாகப்பெற்றோம், முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம் = தத்ப்ரதிபாதகங்களான நம்முடைய பூர்வாசார்யர்களுடைய திவ்ய ஸூக்திகளான ரஹஸ்யங்களை ஆதரமாக வநுஸந்திக்கப்பெற்றோம், முழுதும் நமக்கவைபொழுதே போக்காகப்பெற்றோம் = அதில ஆதராதிசயத்தையுடைய நமக்கு மற்றொன்றில் பொழுதுபோக்காமல் முழுதும் அவற்றையே காலக்ஷேபமாகப் பெற்றோம், பின்னை = இப்படியான வநந்தரம், ஒன்றுதனில் = தத்திதர க்ரந்தங்களிலொன்றிலும், நெஞ்சுபோகாமல் பெற்றோம் = மநஸ்ஸு சலியாமல் இதிலே ப்ரதிஷ்டிதமாம்படி யிருக்கப்பெற்றோம், பிறர்மினுக்கம் பொறாமையில்லா = இதெல்லாமொருதட்டும் தானொரு தட்டுமாயிருக்குமதாய், "இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றம் மறிந்துவுகந்திருக்கையும்" என்னும்படி அரிதாயிருப்பதான பரோத்கர்ஷங்கண்டால் அஸஹிஷ்ணுதையில்லாத, பெருமையும் பெற்றோமே = மஹத்தையும் லபித்தோமே? இதொரு மஹாலாபமிருந்தபடியே! என்று வியந்தருளுகிறார் (உள்ளுகை = விசாரிக்கை). (௫௫)

(வ-ம) தாம்ஸ்யமானகோயிலிலே (ச)* அருள்கொடுத்திட்டடிய வரையாட்கொள்வாராய் (உ)*அன்பொடு தென்திசைநோக்கிப் பள்ளிகொண்டருளுகிறபெரியபெருமாளுடைய நிர்ஹேதுககருபைக்கு லக்ஷ்யமாகப்பெறறோம், (ங) "தென்னனுடைய வடநாடுந்தொழுநின்ற திருவரங்கத்திருப்பதி" என்றும், (ச) "ஆராமம் சூழ்ந்தவரங்கம்" என்றும், (ரு) "தலையரங்கம்" என்றுஞ் சொல்லுகிறபடியே, அகிலதிவ்யதேசப்ரதானமான திருவரங்கத்திருப்பதியே, நித்யமாக வாஸஸ்தானமாகப் பெறறோம், பரபக்தயாதிகல்யாணகுணங்கள் பொருந்தியிருக்கிற வாழ்வாருடைய தொண்டர்க்கமுதான வருள் பூஷணவாக்கமருத்தத்தை ஆஸ்ரமாக புஜிக்கப்பெறறோம்

(சு) "தேவுமற்றறியேன்" என்கையாலே, அவர்களோசகிறித்திருப்பாரெனனுமபடியானமதுரகவிகளுடைய திவ்யஸூக்திப்படியே ‘ யஸ்ய தேவே பரா பக்தி: யதா தேவே ததா குரௌ - யதீந்த்ரமேவ நிரந்தரம் விஷேவேதைவகம்பரம்" (எ) ‘உன்னையொழிய ஒருதெய்வம் மற்றறியாமன்னுபுகழ்சேர்வடுசநம்பி தன்னிலைமை" என்றும், நாமும் நமமுடையாரும பேசும்படியான சரமபர்வநிஷ்டையே நிஷ்டையாகப் பெறறோம் ததபரதிபாதககளான நமமுடைய பூர்வாசார்யர்களுடைய திவ்யஸூக்திகளான ரஹஸ்யங்களை (அ) "நெஞ்சத்தனனால தேறலுமாம்" என்னுமபடி மேலெழுவனறிக்கே ஆந்தரமாக வநுஸந்திக்கப் பெறறோம், அதிலாதராதிசயத்தையுடைய நமக்கு மற்றொன்றில பொழுதுபோக்காமல் முழுதுமவற்றையே காலக்ஷேபமாகப்பெறறோம் இப்படியானவநுக்ரம் தந்திரகரந்தங்களிலொன்றிலும மநஸ்ஸு சலியாமல இதிலே பரதிஷ்டிதமாம்படியிருக்கப் பெறறோம் இதெல்லாமொருதட்டும, தாலொருதட்டுமா யிருக்குமதாய, (க) "இப்படியிருக்கும ஸ்ரீவைஷ்ணவர்களோற்றமறிந்திருக்கையும்" என்னுமபடி - அரிதாயிருப்பதான பரோசராயங்கண்டால அஸஹிஷ்ணுதையில்லாத மஹத்தையும் லபித்தோமே? இதொருமஹாலாபம இருந்தபடியே!, உளருதல=விசாரித்தல (ருரு)

(க) பெரி-தி-ச-க-ங (உ) பெரு-தி-க-கo (ங) பெரி-தி ச-க-கக
ச) சிறியதிரும- (ரு) உ-திருவ-எo (சு) கண்ணி உ
(எ) கக (அ) உபதேசா. (க)மு முக்ஷு-ப்படி-உ.

(அ-கை) "மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்" என்று தம்முடைய நிலையை வெளியிடாநின்றுகொண்டு அதுக்கநுரூபமாக அவர் திருவடிகளில் கைங்கர்யத்தை யபேக்ஷிக்கிறார்.

உன்றனபிமானமே யுத்தாரகமென்று
சிந்தைதெளிந்திருக்கச் செய்தநீ—அந்தோ
எதிராசா நோய்களாலென்னை நலக்காமல்
சதிராக நின்றிருத்தாள் தா. (௫௧)

எதிராசா = யதிகளுக்கு நாதரானவரே! உன்றன் அபிமானமே உத்தாரகமென்று = ("ஆசார்யாபிமாநமே யுத்தாரகம்" என்கிறபடியே) தேவருடைய அபிமாநமே யிவ்வாத்மாவுக் குத்தாரகமென்று, சிந்தை தெளிந்திருக்கச்செய்தநீ = "தெளிவுற்ற சிந்தையர்" என்கிறபடியே, மநஸ்ஸு நிர்மலமாய் தந்நிஷ்டனாயிருக்கும்படி பண்ணியிருக்கும்படி உபகரித்தருளின தேவர், அந்தோ = ஐயோ! நோய்களால் = வேதனைகளால், என்னை = அடியேனை, நலக்காமல் = பாதியாமல், சதிராக = ஸாமர்த்தியமாக, நின்திருத்தாள் = தேவர் திருவடிகளை, தா = ப்ரஸாதித் தருளவேணும். (௫௧)

(வ்-ம்) எதிகளுக்கு நாதரானவரே! "ஆசார்யாபிமானமே யுத்தாரகம்" என்கிறபடியே, தேவருடைய அபிமானமே இவ்வாத்மாவுக்குத்தாரகமென்று (௧) "தெளிவுற்ற சிந்தையர்" என்கிறபடியே, மநஃப்ரஸாதமுண்டாய், தந்நிஷ்டராயிருக்கும்படிபண்ணி உபகரித்தருளினதேவர், அய்யோ! வேதனைகளாலடியேனை நலக்கேடுபண்ணாமல் (௨) "సుఖేనేమాం ప్రకృతిం స్థూలసూక్ష్మరూపాం విసృజ్య-సాంకే தமாம் ப்ரக்ருதிம் ஸ்தூலஸூக்ஷ்மரூபாம் விஸ்ருஜ்ய" என்கிறபடியே. ஸாமர்த்த்யமாக (௩) "உன்பதயுகமா மேர்கொண்டவீடு" என்கிறபடியேதேவர் திருவடிகளை ப்ரஸாதித்தருளவேணும். சதிர்—விரகு. (௫௧)

(அ-கை) இப்படி நீர்சொல்லுகிற நிர்ப்பந்தமெல்லாங்கேட்டு, நாம் உம் கார்யம்செய்கைக்கு எந்த ஸம்பந்தப்ராபல்யங்கொண்டு தடருகிறீரென்ன, பிள்ளை திருவடிகளையாச்ரயித்த ராஜகுலமாஹாத்ம்யத்காலே யொருவஸ்து வென்றபிமானித்து, அடியேனுடைய

(௧) தி-வாய்-எ-௫-௪௧. (௨) சரணாகதிகத்யம். (௩) இரா-நூ-

அபராதம் பாராததேவர் (க) "யதீச்வர ச்ருணு ஸ்ரீமந் க்ருபயா பரயா தவ" என்கிறபடியே, அடியேனுடைய முக்த (ஶ) ஜல்பிதத்தைச் செவிதாழ்த்துக் கேட்டருளவேணுமென்கிறார்.

> தேசிகர்கள்போற்றும் திருவாய்மொழிப்பிள்ளை
> வாசமலர்த்தாளடைந்த வத்துவென்று—நேசத்தால்
> என் பிழைகள்காணு வெதிராசரே யடியேன்
> புன்பகர்வைக் கேளும் பொறுத்து. (௫௭)

தேசிகர்கள் போற்றும் திருவாய்மொழிப்பிள்ளை = தேசிககுல கூடஸ்தரான ஆழ்வாருடைய அசேஷ வ்ருத்தியிலும் அந்விதராய், அதுவேயாத்ரையாய்ச் செய்துகொண்டு போருகையாலே, "செந்தமிழ்வேதத் திருமலையாழ்வார்வாழி" என்று, ஆசார்யர்களாலே மங்களாசாஸநம் பண்ணும்படியான மாஹாத்ம்யத்தை யுடையரான பிள்ளையுடைய, வாசமலர்த்தாளடைந்த = ஸௌகந்த்ய ஸௌகுமார்ய யுக்தமான திருவடிகளை யாஶ்ரயித்த, வத்துவென்று = சேஷத்வாஶ்ரயமான வஸ்துவென்கிற, நேசத்தால் = ஸ்நேஹத்தாலே, என்பிழைகள்காணு = அடியேனுடைய அபராதங்களை தர்ஶியாதே, (அதில் அவிஜ்ஞாதாவா யிருக்கிற) எதிராசரே = எம்பெருமானாரே! அடியேன் = அடியேனுடைய, புன்பகர்வை = அல்பவார்த்தைகளை, பொறுத்து = சீறாமல் ஸஹித்து, கேளும் = ஸாதரமாகத் திருச்செவிசாத்தியருளவேணும். (௫௭)

(வ்-ம்) தேசிககுலகூடஸ்தரான வாழ்வாருடைய வஶேஷவ்ருத்தியிலு மந்விதராய், அதுவேயாத்ரையாய்ச் செய்துகொண்டுபோருகையாலே, "செந்தமிழ்வேதத் திருமலையாழ்வார்வாழி" என்று ஆசார்யர்களாலே மங்களாஶாஸநம் பண்ணும்படியான மாஹாத்ம்யத்தையுடையரானபிள்ளையுடைய ஸௌகந்த்ய ஸௌகுமார்யயுக்தமான திருவடிகளை யாஶ்ரயித்து ஶேஷத்வாஶ்ரயமான வஸ்துவென்கிற ஸ்நேஹத்தாலே அடியேனுடைய வபராதங்களை தர்ஶியாதே, அதில் அவிஜ்ஞாதாவாயிருக்கிற தேவர் அடியேனுடைய தோஷயுக்தமான முக்த(ஶ)ஜல்பிதத்தைச் சீறாமல் ஸஹித்து நின்று ஸாதரமாகத் திருச்செவிசாத்தியருளவேணும். (௫௮)

(அ-கை) "திருவாய்மொழிப்பிள்ளை வாசமலர்த் தாளடைந்த வத்து" என்கிறமாத்திரமேயோ? அவராலே லப்தஜ்ஞானனான வெனக்கு த்வத்ஸம்பந்தஜ்ஞான மில்லையோ வென்கிறார்.

எந்தை திருவாய்மொழிப்பிள்ளை யின்னருளால்
உன்றனுறவை யுணர்த்தியபின்—இந்தவுயிர்க்
கெல்லாவுறவும் நீயென்றே யெதிராசா
நில்லாததுண்டோ வென்னெஞ்சு. (நிஅ)

எந்தை — "திருமந்த்ரம் மாதாவும், பிதாவாசார்யனு மென்றருளிச் செய்வர்கள்" என்கிறபடியே, எனக்குப்பிதாவான. திருவாய்மொழிப்பிள்ளை =திருவாய்மொழிப்பிள்ளை தம்முடைய, இன்னருளால்=நிர்ஹேதுக க்ருபையாலே, உன்றனுறவை=தேவர் திருவடிகளில் ஸர்வவித பந்துத்வத்தையும், உணர்த்தியபின் = அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணி ரக்ஷித்தருளின வநந்தரம், இந்தவுயிர்க்கு=இப்படியுண்டான ஸம்பந்தத்தையறிந்த விந்த வாத்மாவுக்கு, எல்லாவுறவும் = மந்த்ர ப்ரதிபாத்யமான நவவிதஸம்பந்தமும், நீயென்றே=தேவரென்றே, (அத்யவஸித்து) எதிராசா = எம்பெருமானாரே! என்னெஞ்சு = அடியேனுடைய மநஸ்ஸு, நில்லாததுண்டோ? = நிலைநில்லாதே யிருக்குமதுண்டோ? "தந்தை நற்றாய் தாரந் தனயர் பெருஞ்செல்வ மென்றனக்கு நீயே" என்றும், "அல்லாச்சுற்றமுமாகி" என்றுமன்றோ விருப்பது? (கூஉ)

(வ்-ம்) "திருமந்த்ரம்மாதாவும், பிதா ஆசார்யனுமென்றருளிச் செய்வர்கள்" என்கிறபடியே எனக்கு ஜநகரான திருவாய்மொழிப் பிள்ளை தம்முடைய நிர்ஹேதுக க்ருபையாலே, தேவர் திருவடிகளில் ஸர்வவிதபந்துத்வத்தையும் அஜ்ஞாதஜ்ஞாபநம்பண்ணி ரக்ஷித்தருளின வநந்தரம் இப்படி யுண்டானஸம்பந்தத்தை யறிந்த விந்த வாத்மாவுக்கு மந்த்ரப்ரதிபாத்யமான நவவிதஸம்பந்தமும் தேவரென்று அத்யவஸித்து அதில் நிலைநில்லாதே இருக்குமதுண்டோ என்னுடைய மநஸ்ஸு; "தந்தை நற்றாய் தாரந் தனயர் பெருஞ் செல்வமென்றனக்கு நீயே" என்றும், "அல்லாச்சுற்றமுமாகி" என்றுமன்றோ விருப்பது. (நிஅ)

(அ-கை) இப்படி தேவர் திருவடிகளில் ஸம்பந்தஜ்ஞானத்தை யுடையவெனக்கு ஹிதபரரான பெரியபெருமாள் பெரியதிருவடியை மேற்கொண்டுவந்து முகக்காஸந்முண்டாக்கித் தாமே மார்க்கசிந்தை பண்ணி தேஹவிமோசநம் பண்ணுங்காலாவதியை யருளிச்செய்ய வேணுமென்கிறார்

எந்தைத்திருவரங்கர் ஏரார்கருடன்மேல்
வந்து முகங்காட்டி வழிநடத்த — சிந்தைசெய்திப்
பொல்லாவுடம்புதனைப் போக்குவதெந்நாள்கொலோ
சொல்லாய் எதிராசா சூழ்ந்து (௫௧)

எந்தை = அடியேனுக்குத் தந்தையும் தாயுமான திருவரங்கர் = கோயிலையிட்டு நிரூபிக்கும்படியான பெரியபெருமாள், ஏரார்கருடன்மேல் = அழகு நிறைந்த பெரியதிருவடியின்மேல், வந்து = எழுந்தருளி, முகங்காட்டி = சரம விக்ரஹஸமயத்திலே அடியேனுக்கபேக்ஷிதமான கஸ்தூரி திருநாமத்தையும், முறுவலையுடைத்தான திருமுகமண்டலத்தையுங்காட்டி, வழிநடத்த = அர்ச்சிராதிமார்க்கத்தாலே நடத்திக்கொண்டுபோக, சிந்தைசெய்து = மநநம்பண்ணி, இப்பொல்லா வுடம்புதனை = இந்த ஹேயமான தேஹந்தன்னை, போக்குவதெந்நாள்கொலோ = தேவர்க்காகப் போக்கியருளுவதெந்நாளோ? எதிராசா = எம்பெருமானாரே! சூழ்ந்து = (அத்தைநான் தேறியிருக்கும்படி) விசாரித்து, சொல்லாய் = அருளிச்செய்தருளீர்

(வ-ம்) எனக்குத் தந்தையும் தாயுமானவராய் கோயிலையிட்டுநிரூபிக்கும்படியான பெரியபெருமாள், (௧) *அஞ்சிறைப்புள்பாகரான வாகாரந்தோன்ற ஸௌந்தர்யாதிகளால் மிக்கிருக்கிற பெரியதிருவடிமேல்கொண்டெழுந்தருளி ஶரீரவியோகஸமயத்திலே எனக்கபேக்ஷிதமான கஸ்தூரிதிருநாமத்தையும், (௨) "நலத்திரமுத்தவெண்ணகைச்செய்யவாய்" என்று முறுவலையுடைத்தான ஒளிமதிசேர் திருமுகத்தையுங்காட்டி யநுபவிப்பித்து (௩) *அரங்கத்துறையுமின்துணைவனான தாம் அர்ச்சிராதிமார்க்கத்தாலே கொண்டுபோய்

(௧) திருமெ ௧ ௫ (௨) பெரு-தி ௨-௭ (௩) தி-மொ-

(௧) "ஸ்வாமி-நயாமி" யின்படியே வழிநடத்த மனம்பண்ணி (௨) 'உன் சரணந் தந்தென் சன்மங் களையாயே" என்னும்படியே அதுக் கந்தர பாவியாகவிந்த ஹேயமான தேஹந்தன்னை தேவர்க்காகப் போக்கியருளுவது என்னாள், அத்தை நான் தேறியிருக்கும்படி விசாரித்தருளிச்செய்தருளீர் (௩) 'ஸ்ரீமுனே சதுர்த்தசே வர்ஷே-ப்ராணே சாந்தத்தசே வர்ஷே" என்று நாளவதியிட்டு, பின்பு (௪) 'ஸம்ஸாரம் ஹர்ஷபுஷ்டம் ஆருரோஹாதம ஹ்ருஷ்டஃ' என்று ஹர்ஷபுஷ்ட ரபிருந்தாப்போலே அதுகொண்டு நான் ஹ்ருஷ்டனாய் இருக்கலாய்த்து அன்றிக்கே சூழ்ந்தென்கிறது-பெரியபெருமாள் *அவாவறச் சூழ்ந்த படியாகவுமாம் (௫) 'சொல்லு நீ யாம் அறியச் சூழ்ந்து" என்கிறவிடத்துக்கு விசாரித்தென்றிறே வ்யாக்யானம் பண்ணினார்கள் (௫௧)

(அ-கை) இனி நம்பேற்றுக்கு நாம் தாமதப்ரிக்கவேணுமோ? பெரியபெருமாள் எம்பெருமானாருக்குப் பண்ணியருளின பேறுகளெல்லாம் அவர் திருவடிகளில் ஸம்பந்தமுடைய நமக்கு தா(௬)யப்ராப்தமாயிருப்பதொன்றன்றோவென்று அத்தைத் தாம் பெற்றாராகத் திருவுள்ளத்தோடேகூடி ப்ரீதராயருளுகிறார்

இந்தவரங்கத் தினிதிருநீ யென்றரங்கர்
எந்தையெதிராசர்க்கீந்தவரம் — சிந்தைசெயில்
நம்மதன்றோ நெஞ்சமே நற்றாதைசொம்புதல்வர்
தம்மதன்றோ தாயமுறைதான் (௬௦)

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்

அரங்கர் = பெரியபெருமாள், இந்த வரங்கத்து = இந்தக் கோயிலிலே, இனிதிருநீயென்று = ('ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ") என்கிறபடியே ஸுகமாகவிருமென்று, எந்தை யெதிராசர்க்கு = அடியேனுக்குப் பிதாவான எம்பெருமானார்க்கு, ஈந்தவரம் = ப்ரஸாதித்தருளின வரத்தை, சிந்தை செயில் = விசாரிக்குமளவில், நெஞ்சமே = மானஸ்ஸே நம்மதன்றோ = நம்முடைய

(௧) வராஹசரமம் (௨) திருவாய்-௫-௮-௭ (௩) ஜா-அயோ-
(௪) ஜா-யு- (௫)

தன்றோ? (அதெப்படியென்னில்) நற்றாதை=நிருபாதிகபிதாவினுடைய, சொம்=சொத்துக்கள், தாயமுறைதான் (दाय) தாயப்ராப்தியாலே, புதல்வர் தமதன்றோ=புத்ரனுக்காகவேயன்றோ விருப்பது? (ஆகையாலே நம் ப்ராப்திக்கு நாமே யத்நிக்கவேண்டா) எல்லாம் ஸித்தமாகவே யன்றோ இருக்கிறது? இனி அவரிடத்திலே ந்யஸ்தபரராயிருக்குமத்தனை

ஆக இத்தால் உபயவிபூதியை ஸ்வாயத்ததையும் பெரியபெருமாளாலே பெற்றுடையராய், அத்தாலே "ஸ்ரீவிஷ்ணுலோக மணிமண்டபமார்க்கந்தாயி" யாய், ப்ரபந்ந ஜநகூடஸ்தராயிருக்கிற எம்பெருமானார் திருவடிகளிலே ருசிகார்யமாக, யதீந்த்ரப்ரவணரான ஜீயர் பண்ணியருளின ப்ரார்த்தனை, அவரபிமாநாந்தர்ப்பூதரெல்லார்க்குமாய், அத்தாலே எம்பெருமானார் ப்ரஸாதத்தைப்பெற்று நித்யவிபூதியான பரமபதத்திலே நிரந்தரபகவதநுபவகைங்கர்ய நிரதராய் வாழப்பெறுவார்களென்று ஆர்த்தஜ்ஞர் சொல்லித் தலைக்கட்டியருளிற்று (௬௰)

(வ-ம)(க) ‘‘ద్వయమర్థానుసన్ధానేనసహ సదైవంవక్తా యావచ్ఛరీరపాతమత్రైవ శ్రీరఙ్గే సుఖమాస్వ-த்வயம் அர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதைவம் வக்தா, யாவச்சரீரபாதமத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ" என்றருளிச்செய்து, அநந்தரம், ‘‘శరీరపాతసమయే తు ஸரீரபாதஸமயேது" என்று தொடங்கி ‘ నిత్యకిఙ్కరో భవిష్యసి, మా తేభూదత్రసంశయః-ఇతి మయైవహ్యుక్తమ్- అతస్త్వం తత్త్వతో మత్ జ్ఞానదర్శనప్రాప్తిషు నిశ్శంసయస్సుఖమాస్వ-நித்யகிங்கரோ பவிஷ்யஸி, மாதே பூதத்ரஸம்ஸய:-இதி மயைவஹ்யுக்தம்-அதஸ்த்வம் தத்வதோ மத்ஜ்ஞாநதர்ஸநப்ராப்திஷு நிஸ்ஸம்ஸயஸ்ஸுகமாஸ்வ" என்னுமளவாக தேஹபாதந்தொடங்கி கைங்கர்யபர்யந்தமாக வுண்டான பேறுகளெல்லாம், நாமே தலைக்கட்டித்தருகிறோமென்று, பெரியபெருமாள் நமக்கு ஜநகரான எம்பெருமானார்க்கு வழங்கியருளினவர்த்தை நிரூபிக்கில், அவர்க்கவர் ஜநகரான நம்மதன்றோ மநஸ்ஸே!,

அதெப்படி யென்னில்,-நிருபாதிகபிதாவானவன் ஸ்வம் தாயப்ராப்தியாலே புத்திரனுக்கேயன்றோவிருப்பது? ஆகையாலே நம்ப்ராப்திக்கு நாமே யத்நிக்கவேண்டா? எல்லாம் ஸித்தமாயே யன்றோ யிருக்கிறது? இனி அவரிடத்திலே ந்யஸ்தபரராயிருக்குமத்த

---

(க) ஶரணாகதிகத்யம்

தனை. ஆகவித்தால் உபயவிபூத்யைச்வர்யத்தையும், பெரியபெருமாளாலே பெற்றுடையராய், அத்தாலே "ஶ்ரீவிஷ்ணுலோகமணிமண்டபமார்க்கதாயீ-ஶ்ரீவிஷ்ணுலோக மணிமண்டபமார்க்கதாயிபாய், ப்ரபந்நஜநகூடஸ்தராயிருக்கிற வெம்பெருமானார் திருவடிகளிலே ருசிகார்யமாக, யதீந்த்ரப்ரவணரான ஜீயர் பண்ணியருளின ப்ராப்யப்ரார்த்தனை-அவரபிமாநாந்தர்ப்பூதரெல்லார்க்குமாய், அத்தாலே எம்பெருமானார் ப்ரஸாதத்தைப்பெற்று, நித்யவிபூதியிலே நிரந்தரபகவதநுபவகைங்கர்யநிரதராய் வாழப்பெறுவார்களென்றவர்த்தஞ்சொல்லித் தலைக்கட்டிற்றாயிற்று.

எதிராசா! எதிராசா! என்று ஸம்போதிக்கிறதெல்லாம் தமக்குமவர்களோடொத்த ப்ராப்தியுண்டாகையாலும், "யஸ்யஸ்யஶ்ருதஸ்ஸ-யதயப்ராப்தஸத்வா:" என்கிறபடியே யதிகளுக்கு நாதராகையாலும், அத்தையடிக்கடி யாதரித்தருளிச்செய்கிறார்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த

ஆர்த்திப்ரபந்தவ்யாக்யானம் முற்றிற்று,



## மணவாளமாமுனிகள் வாழித்திருநாமம்

இப்புவியிலரங்கேசர்க்கு ஈடளித்தான் வாழியே
எழில்திருவாய்மொழிப்பிள்ளை யிணையடியோன் வாழியே
ஐப்பசியில் திருமூலத் தவதரித்தான் வாழியே
அரவரசப்பெருஞ்சோதி யனந்தனென்றும் வாழியே
எப்பொழுதும் ஸ்ரீசைலமேத்தகவந்தோன் வாழியே
ஏராருமெதிராச ரெனவுதித்தான் வாழியே
முப்புரிநூல் மணிவடமும் முக்கோல் தரித்தான் வாழியே
மூதரியமணவாள மாமுனிவன் வாழியே

## நாள்பாட்டு

செந்தமிழ்வேதியர் சிந்தைதெளிந்து சிறந்துமகிழ்ந்திடுநாள்
சீருலகாரியர் செய்தருணற்கலை தேசுபொலிந்திடுநாள்
மந்தமதிப்புவி மானிடர்தங்களை வானிலுயர்த்திடுநாள்
மாசறுஞானியர் சேரெதிராசர்தம் வாழ்வுமுளைத்திடுநாள்
கந்தமலர்ப்பொழில் சூழ்குருகாதிபன் கலைகள் விளங்கிடுநாள்
காரமர்மேனி யரங்கநகர்க்கிறை கண்கள் களித்திடுநாள்
அந்தமில்சீர் மணவாளமுனிப்பர னவதாரஞ் செய்திடுநாள்
அழகுதிகழ்ந்திடு மைப்பசியிற் றிருமூலத்தனிநாளே